அரனடியார்கள் கோனடையில்வருந்தலைப் பார்க்கவே
அரன் தன்னிரிப்பந்தர் வைக்கவும்பெற்றதுவே
வருந்தப்பஞ்சம்வந்து வளர்கிழிபெற்றுப் போஷித்
[தே - திரு
மருகல்வணிகனை அரவுதீண்டியதைத் தீர்த்திட்டே
திருமறைக்காட்டினில் மறைக்கதவைமூடியே
தீண்டப்பாண்டியனை தீர்த்துகூன் சுரம்
பாண்டியராஜன் முன் மாண்டிடச்சமணரே. ௨.

சமணர்சப்பந்தரு மரசன்முன்வாது கூறியே
அமணருமன்பரு மக்கினியாற்றிலிட்டேட்டையே
அமணரேடுவெந்து மாற்றிலடித்துக்கொண்டும் போ
[னதே - நம
நல்பரோடக்கினி ஜயித்துமாறெதிர்க்கவு மானதே
அமணரெண்ணாயிரவா அரசல்கழுவிலேற்றி
ஆல்வடவனைப்பாடி தாண்டிநதிப்பெருக்கை
அடியரோடுதாமு மோடத்திலேறியே. ௩.

காரிடிதல்லினைச் சாரிபுத்தன்தலை யேற்றியே
காயாப்பனைகள் கனிகொடுக்கவும் போற்றியே
ஈரயிலாவங்க முயிலையெய்த வேற்றியே - குரு
இலங்குமயிலைப் பூம்பாவையாக மாற்றியே
சீர்தந்தைவேண்டுதலால் திருமணஞ்செய்துநல்
லூர்ப்பெருமணத்தினில் உத்தமபத்தினிமற்றெல்
லோருடன்சேசவன்ஜோதி ஈசனையடைந்தாரே. ௪.

## ஏயர்கோன்கலிக்காம நாயனார்.

இராகம் - முகாரி - ஆதிதாளம்.

பல்லவி.

சோழராஜ்ரிடத்தே-பரம்பரை-சேனைக்கதிபதியே

அநுபல்லவி.

ஏயர்கோன்கலிக் காமநாயனார் என்பர்வேளாளரே.

சரணங்கள்.

திருப்புன்கூர்தனிமேல சிவத்தலத்
திருப்பணிமிகச்செய்தே
குருலிங்கசங்கம பத்தியிற்சிறந்தோர்
பரவையார்தம்மிடத்தே. க.

சுந்தரர்சிவன்றனையே சந்திக்குச்
செல்லவனுப்பிக்கேட்டு
வெந்துயர்கோபங் கொண்டதையன்பர்
சுந்தரருங்கேட்டு. உ.

ஆரற்கறிவித்திடவே அவரும்
இருவரைக்கூட்டுதற்கு
திருவுளங்கொண்டு சூலைநோயேவ
தொண்டர்கலிக்காமர்க்கு. ங.

தொண்டர்சிவனைத் துதித்தேநோயைத்
தீர்க்கவேணுமென்றே

தொண்டர்சுந்தரரா லன்றிஇன்றேனும்
திரப்படாதென்றே. ௪.

வன்றொண்டர்வா வதனைக்கேட்டு
வயிற்றைக்கிழித்துக்கொண்டே
தொண்டரிறந்ததைச் சுந்தரர்பார்த்துத்
தாமும்வாளெடுத்தார். ௫.

பாமனருளினாலே அப்போ
பத்தர்உயிர்த்தெழுந்து
இருவருங்கூடி நன்றாயிருந்து
திருத்தொண்டுசெய்திருந்து. ௬.

நேசமோடு நிதமேஅன்பர்
பூசைசெய்துஇருந்து
கேசவன்போற்றிடு மீசன்பதத்தை
நேசித்தடைந்தாரே. ௭.

---

## திருமூலநாயனார்.

இராகம்-செஞ்சுருட்டி - ஆதிதாளம்.

பல்லவி.

திருமூலநாயனார் தமிழ் நாட்டே
திருமந்திரஞ்செய்ததிரு விளையாட்டே

அநுபல்லவி.

பரமசிவகிரியில் ஒருசிவயோகி
குறுமுனிபொதிகைக்கே வருபவர்வழியில்.

சரணங்கள்.

காவிரியாற்றங் கரையின்புறவிலே
கன்றுபசுக்கள் அழுதலைஎதிரே. ௧.

சாத்தனூர்மூலன் மேய்த்தஇடையனே
செத்திருக்கப் பசுக்கள் துயரத்தைநீக்கவே. ௨.

தம்மதுதேகத்தை யரண்செய்துவைத்தே
அம்மூலனுக்குள்ளே புகுந்துயர்நீக்கி. ௩.

தமதுசரீரத்தைத் தேடமறைந்தே
திருவருளேயென்று தெளிந்துதுதித்தே. ௪.

ஆவடுதுறையில் அரசின்கீழே
அமர்ந்துயோகஞ்செய்து ஆண்டுக்கோர்பாட்டாய்.

சைவாகமத்தை மூவாயிரமாய்
செய்துகேசவன்துதி சிவகிரியடைந்தார். ௫.

---

தண்டியடிகணாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

திருவாரூரில் தண்டியடிகள் பிறவிக்குருடரோ.

### பல்லவி.

அருமையகக்கண் கொண்டானைக்கண்
டல்லும்பகலும் துதித்தாரே.

### சரணங்கள்.

அங்குளங்கோயிலைக் காலந்தோறும்
அன்பாய்வலஞ்செய்தோர்
அருகிலிருக்கும்அத் திருக்குளக்கரையிலும்
தறிநட்டுக்கயிறுகட்டித் தடவியே. ௧.

கல்லும்போது சமணர்பொறாமை
கொண்டவரையணைந்தே
கல்லேல்பிராணிக ளிறந்துபோங்கலைக்கெடேல்
காதுங்கேட்க வில்லையோ. ௨.

என்றவமணரா யன்பர்கலங்கி
எங்கள்சிவனருளால்
உங்கள்கண்கள்கெட்டு எங்கள்கண்ணைப்பெறுவேன்
ஊரிலிரோமென்று உயுத்தமுமாய். ௩.

அன்பரழுதிட அவர்க்குமரசர்க்கும்
அரய்கனவினிலருளி
அன்பர்குளம்முழுகி கண்பெற்றரசர்முன்
அமணர்கண்கெட்டு ஓடிப்போய். ௪.

நேசமாவணங்கி யரசர்களுக்கட்டி
நேர்ந்நாளிருந்தன்பர்
கேசவன்போற்றிடு மீசன்பதத்தை
ஆசையுற்றென்றும் எய்தாரே. ௫.

---

## மூர்க்க நாயனார்.

இராகம் - கனடா - ஆதிதாளம்.

பல்லவி.

தோர்க்காமல்சூதில் தேடிப் பொருளிலே
மூர்க்கர்மகேசுர பூசையே.

அநுபல்லவி.

ஆர்வலடியார்திரு வேற்காட்டில்வேளாளர்
அன்பொடனடியவர்க் கமுதுசெய்விப்பர்.

சரணங்கள்.

அடியாரனேகர் வருகின்றமையால்
அவர்தப்பிடத்திலுள்ள
மனைநிலம்விற்றும் அன்பொடுபூசை
அகலாதுசெய்துபின் வறுமையெய்தி. ௧.

நாடுமனம்பயின்ற சூதிலேபொருள்
தேடிநினைந்தவ்வூரில்

சேமமாயாடுவோ ரில்லாமையுந்தி
சென்றாரகன்று சிவஸ்தலந்தோறும். ௨

தரிசித்துக்கும்ப கோணமடைந்து.
தோர்க்காருகில் தேடி
பொருளில்பமேகசா பூசைசெய்துருகில்
மறுத்தவனாஉடை வாளுருவிக்குத்தி. ௩.

நேசர்நற்சூதர் மூர்க்கனெனும்பெயர்
நேரிட்டுந்தியதியை முடித்து
கேசவன்போற்றிடும் ஈசன்பாதம
கேசரபூசையால் எய்தினரென்றும். ௪.

---

## சோமாசிமாற நாயனார்.

இராகம் - ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

திருவம்பரிலே பிரம்மகுலத்திலே
திருத்தொண்டு சோமாசிமாறர்.

சரணங்கள்.

பரமசிவனது பஞ்சாக்ஷரத்தை
பத்தியோடு ஜபித்தல் நித்தியநியமமென
பகர்ந்தோரே இவர் எப்போதும்
பாரினில்யாகமும் பிரீதியாய்ச்செய்தோர். ௧.

அரனடியவர்களை அமுதுசெய்விப்பவர்
திருவாரூர்ச்சென்று தொண்டர்சுந்தரர்தம்
திருவடிபூசித்து வருந்தாதே
சிறுத்தொண்டர் செங்காட்டங்குடியில் சிவபதம்பெற்றார். ௨.

## சாக்கிய நாயனார்.

இராகம் - ஆகிரி. அடதாளம்.

பல்லவி.

சாக்கியர்போலும் லிங்கத்தைக்கல்லால்
தாக்கினருண்டோ.

அநுபல்லவி.

பாக்கியவேளாளர் திருச்சங்கமங்கையில்
பௌத்தம்பிரவேசித்துப் பலசமயமிகழ்ந்து.

சரணங்கள்.

பரமசிவனேபதி பகர்சைவமெய்யென்றும்
திருவடியெக்காலுந் தியானிப்பாராயினர். க.

போசனஞ்செய்யுமுன் சிவலிங்கமேற்கல்லை
பிரியமாய்த்தெரியாமல் போட்டுப்பூசித்திட. ௨.

ஒருநாளருளினால் மறந்துபுசிக்கப்புக
மறுபடியும்நினைந்து விரைந்தன்பாயெறிந்திட. ௩.

கேசவன்போற்றிடும் ஈசன்பத்தியிற்பட்டு.
நேசர்க்குத்தோன்றிக்கை லாசமருளினார். ௪.

பெண்டிம்மகிழ்ந்தொரோ புதல்வர்சீராளனை
பிடித்துத்தாய்த்தந்தை கொய்து
உண்டார்க்குருசியாய்ப் பாகஞ்செய்துவேண்ட
வைரவர்தனியே உண்ணேம்
தொண்டர்வேண்டுஞ்சிறுத் தொண்டரோஉமைவிட
தொண்டர்வேறிலைபசி யெய்றேஇசைந்து. ௩.

உம்முடலம் உண்ணற்குப் புத்திரன்உண்டேல்
உடனழையுமென்றார்
நம்மிடபுத்திரன் இப்போதுதவா
னென்றுசொலத்தொண்டர்
அம்மைந்தன்வாராமல் உண்ணோந்தேடி
அழையுமழையுமென்றார்
அம்மைநங்கையாருந் தொண்டரும்போய்க்கூவ
அருகில்சீராளர் ஓடிவர. ௪.

தாயாரெடுத்துத் தழுவிமகிழ்ந்து
தொண்டர்கையிற்கொடுக்க
நேயர்வைரவனைக் காணாதிகைக்க
நேசன்கேசவன்தொழும்
ஈசனிடபா ரூடராய்த்தோன்றி
இம்மூவர்தாதியரும்
காசினிபோர்கள் கண்டுகளித்திட
காட்சியைப்பெற்றுக் கைலைசென்று. ௫.

# சேரமான்பெருமாணயனார்.

இராகம்-தர்பார்-ஆதிதாளம்.

பல்லவி.

மகோதைமலைநாட்டில் சேரர்குடியில்
மகிபன்பெருமாக்கோதை.

அநுபல்லவி.

பகவனருளினால் பாலியதசையிலே
பத்திவைராக்கியத்தில் உத்தமமுடையவர்.

சரணங்கள்.

அரன்திருவடிகளை அடைதல்வேண்டுமென
அரசர்க்குரியதொழி லனைத்துமிகழ்ந்தே
திருவஞ்சைக்களமெனுந் திவ்வியஸ்தலத்தினில்
திருத்தொண்டினைந்தோறுஞ் செய்வாராயினர். ௧.

செங்கோற்பொறையன் சேரமகாராஜன்
ஜகத்தைவிட்டுநீங்கித் தவத்திற்குச்செல்ல
அங்குளமந்திரிகள் அவரைவேண்ட
அவரருள்விடைபெற்று அரசுக்குடன்பட்ட. ௨.

அரசியற்றவன்பூர் யானைமீதிற்செல்ல
அங்கொருவண்ணான் உவர்மண்வெளுத்துச் செல்ல
அரனடியாரென்றன்பர் அவனடியில்விழ
அவனடிவண்ணான் இவரடிச்சேரனென்ற. ௩.

மனுநீதிநெறியை நடத்தியரசர்கள்
அனைவர்திறைகொண்ட அரசையியற்றி
தினதினசைவம் அபிவிர்த்தியாகி
தில்லைச்சபாபதி திருச்சிலம்பொலிகேட்டும். ௪.

மதுரைச்சொக்கேசர் பாணர்க்குப்பொன்தர
மகிபர்க்கோலைதந்து மகிழ்ந்தேயளித்திட்ட
அதிபனுமோர்தினம் சிலம்பொலிகேளாமல்
அவர்வாளையுருவி மார்பிலேநாட்ட. ௫.

கனகசபாபதி விரைந்தொலிகேட்பித்து
முனம்வரத்தடைசுந் தரர்பதிகங்கேட்டு
ஐவரசர்கனக சபையைவணங்கி
இயற்றினர்பொன்வண்ணத் தந்தாதியங்கே. ௬.

திருவாரூர்ச்சென்று சுந்தரராக்கண்டு
திருமும்மணிக்கோவை வல்மீசர்க்குப்பாடி
அரசருந்தொண்டரும் அகன்றூரை
அடைந்துவேதாரணியம் அரசாந்தாதிபாடி. ௭.

மதுரைமுதலிய ஸ்தலங்களைவணங்கி
மகிபனுந்தொண்டருங் கொடுங்கோளூரடைந்து
அதியரொருநாள் ஸ்நானம்பண்ணப்போக
அரனனுப்பினவெள்ளை யானையீதிற்செல்லும். ௮.

சுந்தரர்சேரனை நினைத்துக்கொண்டுபோக
சே[illegible]ந்தரசர் குதிரையிலேறி

## கூற்றுவநாயனார்.

இராகம் - தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

பஞ்சாக்ஷரத்தை போதியென்றும்
பரமசிவத்தைப் பணியுங்கூற்றுவர்.

அநுபல்லவி.

வஞ்சிசிவகாம வல்லிமணவாளர்
குஞ்சிதபதமுடிக் களந்தைவேந்தர்.

சரணங்கள்.

அரனடியார்க்குத் திருத்தொண்டுசெய்பவர்
அருள்வலியினால் ஐசுவரியமடைந்து. ௧.

அரசர்பலர்களைப் போர்தனில்வென்று
அவர்களினாடுகள் அனைத்துங்கவர்ந்து. ௨.

தில்லைவாழந்தணர் தம்மைவேண்ட
திருமுடியினைதாம் சூட்டோமென்ன. ௩.

கூற்றுவர்கலங்கித் திருவடிமுடியை
கேட்கச்சொப்பனத்தில் கடவுளருளி. ௪.

நேசமோடாண்டு திருப்பணிசெய்து
கேசவன்போற்றும் ஈசனையடைந்தார். ௫



# பொய்யடிமையில்லாத புலவர்.

இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

பாண்டிநாட்டிற்சிறந்து விளங்குந்துவாதசாந்த
புரமதுரா புரியிலே.

அநுபல்லவி.

ஆண்டகுருசொக்கேசர் அருகிற்சதுரமாய்
இரண்டுசாணளவின தாகியெய்ப்புலவர்க்கு.

சரணங்கள்.

முழம்வளர்ந்திருத்தற்கு இடங்கொடுக்கின்றசங்கப்
பலகையைப்பெற்றதனில் இருந்துதமிழ்மொழியை
வளர்த்தகடைச்சங்கப் புலவர்கபிலர்முதல்
உளமாய்நாற்பத்தொன்பதின்மர்மெய்ப்புலவர்கள்.

உருத்திராக்ஷம்விபூதி தாரணர்களாய்பஞ்சாக்
கரஜபபரர்களாகி அகத்தியந்தொல்காப்பியம்
பரவுமிலக்கணப் படிஆசுமதுரஞ்சித்
திரம்வித்தாரமென்னும் அரியநாற்கவிகளால். ௨.

பரமசிவனைமெய்யாய்ப் பத்தியோடுபாடி
பொய்யடிமையில்லாப் புலவரெனப்பேர் பெற்று
கருணாகரனருளால் கேசவன்போற்றுஞ்சொக்
கேசர்பதமடைந்த கடைச்சங்கப்புலவர்கள். ௩.

---

## புகழ்ச்சோழநாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

மிக்கநாட்டிலே உறையூரிற்புகழ்ச் சோழநாயனாரே
யாவிலுமந் நரசர்கள்பணிய வரசியற்றினாரே.

சரணங்கள்.

ஆலயங்களெல்லாவற்றிலுமே
அரனார்க்குவேண்டும்
பாலமுதோடு நித்தியநைமித்திகம்
படைத்தாரேயென்றும். ௧

சிவனடியாருக்கு வேண்டுவனவெல்லாஞ்
சிறப்பாய்க்கொடுப்பாரே
பவத்தினைப்போக்குஞ் சைவமெங்குமே
பரவச்செய்தாரே. ௨

சிவகாமியாண்டார் புஷ்பத்தையானை
சிதறியதென்றே
சிவனடி எறிபத்தர் யானைப்பாகரையுஞ்
சேதித்தாரென்றே. ௩

எறிபத்தநாயனார் தம்மைவணங்கி
எஃகையுங்கொல்லுமென்றே

அப்பெருவரசருந் தமதுவாளைக்கொடுத்
தடுமெனும் நின்றனரே. ௪

அதிகனெனு மோரரசன்மாத்திரம்
அரசர்க்குத்திறைகொணரா
தலதையறிந்தவன் அரணேட்டொடிபடுத்தி
அறுப்பினைதலைகளிலே. ௫

ஒருபன்சடைத்தலை கண்டேயரசரும்
உள்ளநடுங்கிக்கலங்கி
பெரும்பாதகமென்று புத்திரர்க்கரசேற்றி
டச்சடைத்தலைதாங்கி. ௬

அக்னிவலம்வந்து கேசவஸ்போற்றிடும்
அரன்திருவடிசேர
அருமைப்பஞ்சாக்ஷர மோதியதனுளே
அடர்ந்துசென்றனரோ. ௭

---

## நரசிங்கமுனையரையநாயனார்.

இராகம் - ஆனந்தபைரவி - ரூபகதாளம்.

பல்லவி.

நரசிங்கமுனையரைய நாயனார்-என்றுமவர்
அரசியற்கையில் வெறுப்பேயடைந்தார்.

## சரணங்கள்.

திருமுனைப்பாடி நாட்டில்அரசராய் - என்றுமவர்
பரமசிவன் பதமே பெறுவராய். ௧.

சர்வாத்மாக்களும் சைவமடையவே - என்றுமவர்
சத்ருவினைகள் கடத்தல் விஜயமே. ௨.

சைவநெறியைத் தழைக்கச்செய்துமே - என்றுமவர்
சிவனடியார்க்கு அமுது படைத்துமே. ௩.

ஆலயங்கட்கு நித்தியநைமித்திகம் - என்றுமவர்
போலநடத்தினர் இல்லை இச்சகம். ௪.

ஆதிரைதோறும் பூசை செய்பவர்-என்றுமவர்
அடியர்க்குநூறு பொன்னைக்கொடுப்பவர். ௫.

தூர்த்தவேடமுள்ள ஒருவரோ - என்றுமவர்
திருநீறணிந்த பேர்க்குக்கொடுப்பரே. ௬.

வந்துபிறருங்கண்டே ஒதுங்கினார் - என்றுமவர்
தந்திருநூறு பொன்னை வணங்கினார். ௭.

கேசவன்தொழுதேற்று மீசனை - என்றுமவர்
நேசித்துப்பத நீழல்நெருங்கினார். ௮.

## அதிபத்த நாயனார்.

இராகம் - ஆம்போகி - ஆதிதாளம்.

பல்லவி.

அதிபத்தர்போ லெவரோ - பாதரில்
அதிபத்தியா னவரோ.

அநுபல்லவி.

பதிநுளைப்பாடியில் நாகபட்டனத்தனில்
பாதவர்குலத்திலே தலைவருமாகியே.

சரணங்கள்.

பாதவர்வலைப்படுந் தலைமீன்தனை நிதம்
பாமசிவனுக்கென்று பத்தியாய்விடுவார். ௧.

ஒருமீனேவரினும் விடவிடக்கடல்தனில்
ஒருமீனேவந்து வறுமையையடைந்தார். ௨.

விலையில்லாத ஒரு நவரத்தினஉறுப்புள்ள
பெருமீன்வந்தும் அதனைக்கடலில்விட ௩.

பலருந்துதித்திடுங் கேசவன்போற்றிடும்
பானுந்தோன்றியே பாகதியடைந்தார். ௪.



## கலிக்கம்ப நாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

சோழமண்டலத்தோர் - கலிக்கம்பர்
போலுமுண்டோ பத்தர்.

அநுபல்லவி.

கோதிலாதபெண்ணா கடந்தனிலொரு
குலவைசியர்சிவ னடியார்களைத்தொழும்.

ஆசையோடமுதை அளிப்பார் - தினம்
அவர்கள்வேண்டியதைக் கொடுப்பார் - பாத
பூசைசெய்யவே தொடுப்பார் - தம்
பணிவிடைக்காரனை அடுப்பார் - அப்போது.

ஆசைமனைவியரும் அறிந்தே - திரு
அடிக்குநீர்வார்க்காத கரத்தை - வெட்டி.
பூசைசெய்தவனைப் பணிந்தே - நிதம்
சேவல்போற்றிய பாதத்தே - செல்ல. ௨.



## கலியநாயனார்.

இராகம்-சாரங்கா - ஆதிதாளம்.

### பல்லவி.

தொண்டமண்டலத்தில் திருவொற்றியூர்தனில்
தொண்டர்கலியர்போலுண்டோ ஜகத்தினில்.

### அநுபல்லவி.

கொண்டபெண்டையுமிலை கூறிப்பேசிவிற்று
கோயில்திருவிளக் கேற்றிட்டபணியும்.

### சரணங்கள்.

செக்கார்குலத்தினர் சக்கரப்பாடியில்
செல்வருமாகவே சிவபுண்ணியத்தினில்
மிக்கவிருப்பிச் சிவாலயந்தன்னில்
மிகுந்ததிருவிளக் கேற்றுமப்போதினில். ௧

பத்திவலிமை பிறர்க்குப்பலப்பட
பரமனவரிட செல்வத்தைக்குறைத்திட
பத்தரொன்றெணெய்த்தனை வாங்கியேவிற்றிட
மிஞ்சுமிலவினை கூலிக்குஞ்செய்திட. ௨

வந்திடுங்கூலியை திருவிளக்கேற்றி
வந்ததுங்கிடையாது முட்டவேசாற்றி
சொந்தமனைவியை விற்றிடப்போற்றி
சோர்ந்தனர்வாங்குவ ரில்லமையால்வற்றி. ௩

பாசத்தைவிட்டுக் கழுத்தையரிந்தனர்
பரப்பிஅகல்களை இரத்தத்தைநிறைத்தற்கு
கேசவப்போற்றிடு மீசனுநேர்வந்து
கையைப்பிடித்துக் கைலைக்குச்சென்ற. ௪

---

## சத்திநாயனார்.

இராகம்-யமுனாகல்யாணி-ரூபகதாளம்.

### பல்லவி.

சத்திநாயனா ரென்றசிவ
பத்தராருஞ்செய்யாப் பெருமைத்தொண்டு.

### அநுபல்லவி.

வெற்றியுளவரிஞ்சி யூரில்குலம்
வேளாளராகிலும் வேந்தரவ்வூரில்.

### சரணங்கள்.

பரமன்திருவடி மறவா திருக்கும்
பத்தர்சிவனடி யார்களைக் கருக்கும்
பெரும்பாதகிகளின் நாக்கை இடுக்கும்
பெருந்தண்டாயத்தால் பிசகாமல் ஒடுக்கும். ௧.

நாசமாகஅவர் சத்தியே யறுக்கும்
நற்றொண்டைநெடுங்காலஞ்செய்துகொண்டிருக்கும்
வீசும்புகழ்பெற்ற கேசவன் துதிக்கும்
ஈசன்பதமடைந்து என்றைக்குஞ் செருக்கும். ௨.

## ஐயடிகள்காடவர்கோனாயனார்.

இராகம்-வசந்தம்-ரூபகதாளம்.

பல்லவி.

காஞ்சியிரசனார்-ஐயடிகள்-காடவர்கோனாயனார்.

சரணங்கள்.

பல்லவர்குலத்தினர் பரமன்திருநெறி
பரவித்தரசாண்டு பல்லுயிரும்புரத்தி. ௧

அடைதல்வேண்டிப்பிற அரசர்தேசங்களை
கீழ்ப்படுத்திப்பல் அரசரும்பணிந்து. ௨

தலங்கள்தோறுஞ்சென்று தரிசித்துத்திருப்பணி
பலவுஞ்செய்தொவ்வொரு தலத்தில்வெண்பாபாடி. ௩

பாசத்தைநீக்கித்தம் புத்திரர்க்கரசேற்றி
கேசவன்போற்றிடும் ஈசனையடைந்தார். ௪

~~~~~~~~~~

## கணம்புல்லநாயனார்.

இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

கணம்புல்லநாயனார் செல்வரோஅவர்
பணம்போயும்பத்தியால் பெருஞ்செல்வநாயனார்.
~~~~~~~~~~

சரணங்கள்.

இருக்குவேளூரிலே பக்தியிற்சிறந்து
பெருத்தசெல்வந்தனைப் பெற்றதைநினைந்து
திருக்கோயிலுக்குள்ளே திருவிளக்கேற்றி
பரனைத்தோத்திரஞ்செய்தல் பயனெனச்செய்து.

வறுமைவந்தும்புலி ஈஸ்வரரிடத்து
வாசல்வீடுஉள்ள பொருள்களும்விற்று
சிறுமைவந்துந்திரு விளக்கேற்றிவந்து
சென்றபின்யாவும் கணம்புல்லைவிற்று. ௨.

விற்றுநெய்வாங்கி விளக்கேற்றிவந்து
சற்றும்விலைபடாப் புல்லையேயெரித்து
பத்தர்புல்போதாமல் முடியையெரித்து
பத்தல்கேசவன்தொழும்பரமன்பதமடைந்த. ௩.

## காரி நாயனார்.

இராகம்- சாவேரி - ஆதிதாளம்.

பல்லவி.

காரிநாயனார் போலுமுண்டோதிருக்
கடவூரிலேதமிழ் கற்றமாபண்டிதர்.

அநுபல்லவி.

சீர்தமிழ்க்கோவை பேரால்பாடித்தாம்
சேர்தமிழ்நாட்டுமூ வேந்தரிடஞ்சென்று.

சரணங்கள்.

அரசர்மகிழும்படி புரைத்திடும்உரைகளை
அவர்நயமாக்கியே கவர்ந்திடும்பொருள்களை
அரன்றனக்காலயம் பலவற்றைக்கட்டுவித்
தடியார்க்குவேண்டிய திரவியந்தனைத்தந்து. ௧.

திருக்கைலாசகிரி மறவாதகருத்தினர்
தொல்லுலகமெங்கும் தம்மதுகீர்த்தியை
நிறுத்திப்பரமசிவன் திருவருளைப்பெற்று
நேர்த்தனமனம்போல உடம்புஞ்சிவகிரி. ௨.

வாசமதாய்கைலாசகிரிதனில்
கேசவன்போற்றிடு மீசன்பதமடைந்து
நேசப்பிரம்மானந்தம் நித்தியமாகவே
நின்றகண்டபரி பூரணந்தோய்ந்தனர். ௩.

---

## நெடுமாறநாயனர்.

இராகம் - ஸ்ரீரஞ்சனி - ஆதிதாளம்.

பல்லவி.

பாண்டிநாடாண்டோரே - சமணரை
மாண்டிடச்செய்தோரே.

சரணங்கள்.

சமணர்தம்போதனை சார்ந்தேயவர்மதம்
அமணருருகதம் அரசேசெல்ல. ௧.

மங்கையர்க்கரசியர் மனைவியர்சிவமதம்
மந்திரிகுலச்சிறை நாயனாராகவே. உ.

இவர்சப்பந்தரை ஈண்டழைப்பித்திட
அவரோஅரசரைத் தீண்டியருள. ௩.

அரசுகூன்நிமிரவே தெம்மாறரென
அரசிமந்தந்தழைக்கவே அரசைஇயற்ற. ௪.

தீசான்சமணர்களுசலேயடைந்தனர்
சேசவல்போற்றிடீசன்பதமே. ௫.

## வாயிலார்நாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

வாயிலாரென்று சொல்லும் - அந்த
நாயனாரோமயிலாப்பூர்வேளாளர்.

சரணங்கள்.

தொண்டமண்டலந் தன்னில் - திரு
மயிலையென்னுமோர் தலத்தில் - எவர்
அண்டினுமவர் பாதத்தில் - நித
நின்றுவாழுமொரு இடத்தில் - இவர். ௧.

ஞானமார்க்கமாய்ச் சிவத்தை - யொரு
நினைவுபிறவா மனத்தை - பெற

ஞானதீபமே பவத்தை - விட்
நீங்கிநின்றனர் அவத்தை - யின். ௨.

பாசமற்றவோர் மனத்தை - பெற
நேசவானந்தமஞ் சனத்தை - ஆட்டி
கேசவன்தொழுஞ் சிவத்தை - நித
மாசையற்றடைந்தார் பதத்தை - இவர். ௩.

## முனையடுவார்நாயனார்.

இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

முனையடுவார்நாயனார் மூலாதாரர்முனைமேய.

சரணங்கள்.

தினதினசிவனடியருக்கு
இன்சுவையோடமுதளித்து
முனைதனிற்றோற்றவர்க்கு
மீளஜயமேயடைந்து. ௧.

வருபொருள்வாங்கும்வேளாளர்
திருநீடூர் சோழநாடு
அரனடியவர் சொன்னது
அனைத்துமீந் திடுமன்பர். ௨.

கவர்பொருளிவர் தொண்டுசெய்து
கேசவன்போற் றிடுமரிய
சிவஸ்பதத்தை யடைந்து
சேவித்துநா ளுமுகந்து. ரு.

## கழற்சிங்கநாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

காடவகழற்சிங்கர் - ஈசன் - கழலன்றிவேறறியார்.

அநுபல்லவி.

காடவராஜர் சீர்குலத்திற்கோ
வாடைபுலத்தரைப் போரினில்வென்ற.

சரணங்கள்.

அவர்நாடெங்கும் அகண்டிடச்சைவம்
அரசர்திருவா ரூரைச்சென்றாரே. க.

கோயிலிற்பூமா தேவிமுகந்து
கொய்ததுசெருத்துணை யவள்மூக்கை. உ.

அரசர்போதாதென் றறுத்தனர்கையும்
அண்டர்கள்புஷ்ப மாரிபெய்தாரே. ௩.

கேசவன்போற்றும் ஈசனார்பதத்தை
பாசமில்லாமல் நேசமோடடைந்தார். ௪.

## இடங்கழிநாயனார்.

இராகம்-செஞ்சுருட்டி- ரூபகதாளம்.

பல்லவி.

கோனாட்டரசர் இடங்கழியாரோ - அந்தக்
கோனேசைவந் தழைக்கச்செய்தாரோ.

சரணங்கள்.

ஆலயங்கட்கு நித்தியநைமித்திகம்
சீலவிதிப்படிச் சிறப்பாய்நடத்தும். ௧.

ஓரடியார்ம கேசுரபூசைக்கு
யாருங்கொடாமலே ஏகியராண்மனை. ௨.

நெல்லெடுத்தவப் பண்டாரத்தைக்கோ
நீரோநமக்குப் பண்டாரமென்று. ௩.

சொல்லிச்சிவனடி யார்களெல்லாம்
குறையறப்பறை யறைவித்தாரோ. ௪.

பாசமுமற்றுக் கேசவன்துதி
நேசப்பதத்தை யென்றுமடைந்த. ௫.

---

## செருத்துணைநாயனார்.

இராகம் - கல்யாணி - அடதாளம்.

பல்லவி.

செருத்துணையிட்டாரோ - சிவத்துரோகம்
அறுக்கும்வாளரன்றோ.

அநுபல்லவி.

மருகனூர்தஞ்சா ஊரில்வேளாளர்
அருமைச்சிவபத்த ராகவவதரித்த.

சரணங்கள்.

திருவாரூர்சென்று தொண்டுசெய்துக்கொண்டு
இருக்கக்கழற்சிங்கர் இல்பமாதேவி. ௧.

மாலைகட்டுமண்ட பத்தருகோர்பூ
மாலொடுமோந்தனள் மூக்கையரிந்து. ௨.

தேசம்புகழ்பெற்ற கேசவன்போற்றிடும்
ஈசன்பதந்தனைக் கின்பமோடேகி. ௩.

---

## புகழ்த்துணை நாயனார்.

இராகம்-ஹம்சத்துவனி-ரூபகதாளம்.

பல்லவி.

சிவாகமத்துவிதிப்படியே சிவபூசைபுகழ்த்துணை.

அநுபல்லவி.

அவர்செருவிலி புத்தூரதனில்
ஆதிசைவர் அன்பாய்ப்பூசை.

சரணங்கள்.

பஞ்சமுண்டாய்ப் பசிமிகப்பெற்று
பரசிவபூசை யாகும்போது

மஞ்சனக்கலசம் முடிமேல்வீழ
மாதவரும் அடியில்வீழ.* க.

அயர்ந்தவன்பர் சொப்பனத்தில்
ஐயன்நிதமோர் காசருளி
மயங்கிக்காசு பீடத்தின்கீழ்
மதித்துக்கொண்ட மெய்யடிமை. உ.

நேசமோடு பூசைசெய்து
நெடுங்கால மாவலோடு
கேசவனுந் தொழுதுபோற்றும்
ஈசன்பாத மேவினரோ. ங.

---

## கோட்புலிநாயனார்.

இராகம் - சுருட்டி - அடதாளம்.

பல்லவி.

கோட்புலிநாயனார் போலெவரே
குலம்வேளாள ரேயவரே.

அநுபல்லவி.

செட்டையிலாப்பதி நாட்டியத்தான்குடி
சேனைக்கதிபதி ராஜருக்கேதொண்டு.

சரணங்கள்.

ஆலயங்கட்கமு தாகவராணுக்கு
அன்பொடுநெற்கோட்டை ஆணையிட்டுத்தன்

சிலர்சுற்றமே செலவழிக்காமல்
சீர்க்கட்டிடப்போர்க்குச் சென்றவருடனே. ௧

பஞ்சமேவந்தது பறித்தசுற்றம்
பாதகமென்றம்பர் பேதமில்லாமல்
அஞ்சியமனைவி ஆண்பிள்ளைதந்தை
ஆகியவனைவரை வாளொடுவெட்டிட. ௨

கேசவன்போற்றிடு மீசன்தோன்றி
கோட்புலியாரைத்தன் கூடவேகொண்டு
நேசச்சுற்றமும் பாபத்தினின்று
நீங்கிச்சுவர்க்கத்தை நேர்ந்தனர்நேமோ. ௩



பத்தராய்ப்பணிவார், பரமனையேபாடுவார், சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்போதுந்திருமேனிதீண்டுவார் முழுநீறுபூசிய முனிவர், அப்பாலு மடிச்சார்ந்தார்.

இங்கிலீசுமெட்டு.

கண்ணிகள்.

பத்தராய்த்தித்தியம் பணிவாரும்
பரமன்றனையே பாடுவாரும் ௧.

சித்தத்தைச்சிவன்பாலே வைத்தாரும்
சிறந்ததிருவாரூர்ப் பிறந்தாரும். ௨.

அத்தனைமூட்டோருந் தியன்பேரும்
அரல் பூபூநீறணி முனிவர்களும். ௩.

கத்தனையப்பாலுஞ் சார்ந்தாரும்
கேசவன்றுதிசிவ பதமடைந்தார். ௪.

---

## பூசலார் நாயனார்.

இராகம்-செஞ்சுருட்டி - ஆதிதாளம்.

பல்லவி.

தொண்டமண்டலந்திரு நின்றவூர்தனில்மனத்
தொண்டுசெய்வேதியர் பூசலார்.

சரணங்கள்.

அண்டர்பிரானுக் காலயங்கட்டுதற்
கற்பமுங்கிடையா தவர்மனத்தேகட்டும். ௧.

காஞ்சிபுரத்தினில் காடவராஜர்
கட்டுகோவிற்கன்று கடவுள்வரேனென்றும். ௨.

பூசலார்கோயிலிற் போவேனென்ன
ஆசையுடனரசர் வந்தவரைப்பணியும். ௩.

தேசமோடேமனப் பூசைசெய்தேநிதம்
சேவலுற்தொழு மீசன்பதமடைந்தார். ௩.

## மங்கையர்க்கரசியார்.

இராகம்-அமீர்கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

மங்கையர்க்கரசியாரே நெடுமாறராஜருக்கு
மனைவியரசியாரே.

சரணங்கள்.

| | |
|---|---|
| சோழராஜன் | புத்திரி - அவர் |
| சைவசமய | மித்திரி |
| பாழுஞ்சமணசமய | சத்திரி - ஞான |
| சம்பந்தர்க்குப் | பத்திரி. ௧. |
| சம்பந்தர்தாம் | பாடும் - திருப் |
| பதிகத்தவர்பேர் | கூடும் |
| சமண்மதத்திற்சார்ந்து | வாடும் - பதி |
| சைவவழியைத் | தேடும். ௨. |
| பாண்டிநாட்டிற் | சைவம் - பரி |
| பாலனஞ்செய் | திருந்தும் |
| பதிஆண்டவாச | சோரடும் - அது |
| கூலமாக | விருத்தும். ௩. |

சேசவஸ்தொழு தேற்றும் - திக
பீசம்பாத ழிரண்டும்
நேசநாயகரு ரோடும் - உள்ள
பாசமற்று அடைந்தும். ௬.

## நேசநாயனார்.

இராகம்-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

காம்பீலிநகரத்தில் சாலியர்
குலத்துத்தலைவர் சிவனடிநேசநாயனார்.

சரணங்கள்.

மனத்தின்செய்கைசிவன் திருவடிக்காக்குந்தங்கள்
இனத்தின்செய்கைசிவ னடியார்களுக்காக்கும். ௧.

வாக்கின்செய்கைபஞ் சாக்ஷரமாகும்நெய்யும்
வஸ்திரம்கோவண மடியார்க்கேவழங்கும். ௨.

குலவன்மைதவராது பலருந்துதிக்கும்அன்பர்
சேசவஸ்போற்றிடு பீசன்பதமடைந்தார். ௩.

## கோச்செங்கட்சோழநாயனார்.

இராகம்-நாதநாமக்கிரியை - ரூபகதாளம்.

பல்லவி.

திருவானைக்கா விலிங்கமேற்
சருகறநூற்கட்டுஞ் சிலந்தி.

அநுபல்லவி.

அருந்தவக்கோச் செங்கட்சோழ
அரசராக அவதரித்தார்.

சரணங்கள்.

பூர்வஜன்மமுணர்ந்தே பிறந்துசைவநெறியோ
டார்வமுற்றுஅரசியற்றி ஆலயங்கள்கட்டுவித்து. க.

சிதம்பரத்தையடைந்தே சிவன்திருவடிவணங்கி
நிதம்பணியுமந்தணர்கள் திருமாளிகைகட்டுவித்து. உ.

கேசவன்தொழுதேத்தும் கனகசபாபதியை
நேசித்தவர்திருவடியின்,நீழலையடைந்தாரேதே. ங.

---

திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார்.

இராகம் - கமாஸ் - ஆதிதாளம்.

பல்லவி.

திருநீலகண்ட யாழ்ப்பாணர்
தீஞ்சுவையாகினர் திருவுளமதனுக்கு.

அநுபல்லவி.

திருவெருக்கத்தம் புலியூரில்சிவன்
திருப்புகழ்யாழில்இட் டேத்தியம்பாடியே.

சரணங்கள்.

சோழநாட்டிற்சிவத் தலங்களைச்சேர்ந்து
சேவித்துப்பாண்டி நாடடைந்து
பாண்டிமதுரையிலெந்தைச்சொக்கேசனை
வாழியென்றேபாட வந்ததுபொற்பலகை. ௧.

வன்மீகநாதனைத் திருவாரூரினில்
வணங்கவடதிசையில் வாயிலொருக்க
பின்சீர்காழியில் ஞானசம்பந்தர்
பெருந்திருவடிகளை யடைந்துவணங்கி. ௨.

பாசமற்றுச்சம் பந்தர்பதிகத்தை
பாடிநல்லூர்ப் பெருமணத்தில்
சேவல்போற்றிடு மீசன்பாதங்களை
கண்டுகளிக்கவே கருத்துடன்சென்று. ௩.

---

## சடையநாயனார்.

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

கண்ணிகள்.

திருமுனைப்பாடி தென்னாட்டதனில்
திருநாவலூரில்
அருமையானஅவ் வாதிசைவர்குல
மதனிலவதரித்தார். ௧.

சடையனுறொறும் வேதியர்கைலை
சிவனருளாட்கொள்ள
விடைகொள்சுந்தரனைப் புத்திரராகப்
பெற்றபேறும்பெற்றார். உ.

நேசமோடுசிவ பூசைசெய்தகில
ஆசையற்றஅருளால்
கேசவன்தொழுங் கைலைநாதனைக்
கண்டுபேறும்பெற்றார். ௩.

---

## இசைஞானியார்.

இராகம்-ஆனந்தபைரவி- ரூபகதாளம்.

பல்லவி.

பேறெவற்றிலும் அருமைப்பிள்ளை
பேறுசுந்தரர்பேறே-பெற்றதாய்
நீறணிமேனி ஆதிசைவஇசை
ஞானியார்நற்றவப் பேறே.

சரணங்கள்.

உலகமெல்லாம் உய்யச்சமயம்
உகந்தகுரவராகி - உற்பனம்
பலசனங்களும் பரசமகற்றி
பரகதிக்கு வித்தேயாகும். க.

யாவருமெய்ஞ் ஞானவொளியை
　யெய்திகத்தைநீங்கிச் - சிவன்றன்
சேவடியைச் சகத்துளோர்கள்
　சேருதற்குபாயமாக. ௨.

நேசனெம்பி ரானுக்கென்று
　நேர்ந்தபிள்ளைபேறு - பெற்றபின்
கேசவம்தொழு மீசன்றன்னை
　கண்டுபேறு பெற்றுமுய்ந்தார். ௩.

திருத்தொண்டர் புராணக்

கீர்த்தனைகள்

முற்றிற்று.

ஆண்டகுருவின் அடியிணை சரணம்.



சிவமயம்.

# குருதரிசன முதலான

## தனிக்கீர்த்தனைகள்.

இராகம்-யமுனா - ரூபகதாளம்.

பல்லவி.

அற்புதச்சேவை யருளினாய்
அம்மயிலையிலேசித்தம் மயிலையிலே.

சரணங்கள்.

அற்புதச்சேவை யருளினாய்
அருகிலியானு நாடினேன்
பொற்பதமுநோக்க முச்சந்திவீதியில்
பற்பலவல்பருந் தற்பரநீயும்வந்-(தற்புதச்) க.

தேசிகர்போல் வரவைநோக்கி
தேஜோமயத்தைக் கண்டுதியங்க
காசினியருங் கடையனானும்
காணக்காட்சி காத்தபீத்த. உ

சொந்தமதாக எத்தனைநீயும்
சுந்தராஞ்சித புஞ்சிரிப்புக்கொண்டு
சந்ததம்வாழ வாவென்றெனை
சொக்கிமயக்கியே சற்குருபோல்வந்து. ௩.

கேசவன்தொழுமுன் குஞ்சிதபாதம்
கேட்டசித்தியு முத்தியுமீயும்
வாசமென்னுள் நேசமோடு
வந்துநாளும் வாழவாழீ - (அற்புதச்.) ௪.

---

இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்.

பல்லவி.

தாயேநீயே காட்சியையீந்தும்
தனியந்தனக்குச்சத் காட்சியையீந்தும்.

சரணங்கள்.

ஆனந்தபூரணி அன்றடியேனுக்கு
ஆட்சிநீயேயென ஆதரித்தென்குறை - (தாயே) ௧.

மாதங்கிசத்திம னோன்மணியோர்மலை
மாதுருபோலடியேன்கண்டுமென்குறை (தாயே) ௨.

உன்னதுரோபக் குறிப்பினதுட்செயல்
உன்னிபரித்திலன் சின்னவனென்குறை - (தாயே) ௩.

அஷ்டசித்தித்தனை யன்பர்களுக்கருள்
அல்லமேஅடியேற் கருளவுமெல்குறை-(தாயே) ௪.

உந்தனைக்கண்டுமுன் சுந்தராஞ்சித
உன்னதபாதத்தைக் காணவுமெங்குறை- (தாயே) ௫.

கேசவனுந்தனைக் கண்டபோதொன்றையும்
பேசப்பெறாத பெரும்பிழையென்னவென் (தாயே)

---

இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

நீந்துரெஞ்சேநீ - ஜனனம் - நீந்துரெஞ்சேநீ.

சரணங்கள்.

இந்திரவானவர் சந்திரசூரியர்க்
கந்தியமாவது ஆழ்ந்தறிந்து. ௧.

அண்டமெலாமொரு வெண்குடைநீழலில்
ஆண்டவரசர்மண் ணுறைதறிந்து. ௨.

மண்பெண்ணாசை மயக்கிக்கெடுப்பதை
மாற்றுமுபாயமே பீத்துமறிந்து. ௩.

கலைசைக்கேசவன் கண்டமயிலையில்
காட்டியசற்குரு பாதநினைந்து - (நீந்து.) ௪.

இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

சற்குருதரிசன மானவர்சஞ்சலம்
சத்தியமாய்த்தீரும்.

அநுபல்லவி.

நிற்குணப்பிரம்ம நிறைந்ததேஜோன்மய
அற்புதரூபமாய்த் தற்பரனுள்வந்த.

சரணங்கள்.

சிற்பரனேவர ஜீவன்முத்தராய்
சிந்தையவிழ்ந்துபின் சின்மயமாகியே
அற்புதவானந்த நிஷ்டையிலாழ்ந்து
அகண்டபரிபூர ணானந்தந்தோய்வர். க.

ஆயுளின்தீர்க்கமு மரோகதேகமும்
அல் பருமைகண்ட ஐசுவரியமுமடைந்து
சேயருநற்குண ராகவெண்சித்தியும்
சேர்ந்தெவரும்வணங் கும்படியாருவர். உ.

அலைமணமகல அஷ்டகஷ்டங்களும்
அதிநஷ்டஞ்சத்துரு மகன்றபுனிதராய்
கலைசைக்கேசவன் கண்டமயிலையில்
காட்டிடச்சற்குரு போலவுங்கண்ட-(சற்குருதரி) ௩.

இராகம்-யமுனா-ரூபகதாளம்.

பல்லவி.

வந்ததேகம்விழுமுனே வாழப்பாரத்தொடேநீ
வாயென் னெஞ்சமே.

சரணங்கள்.

வந்ததேகம்வீழில் எந்ததேகமோகேள்
உந்தனுக்காண்டவர் பந்தப்படிக்கிலர். ௧.

ஐயோவுன்மானிட தேகமனைத்திலும்
அரிதரிதென்றேநீ யறிந்துங்கெட்டாயே. ௨.

மண்பெண்ணுங்கூட வருமென்றுநீயும்
மயங்கினைமாய்கை மறுத்தருள்தேடி. ௩.

கேசவனேசன் குருபரன்பாதத்தை
கும்பிட்டுறவாய்க் குறித்துக்கொண்டாடி- (வந்ததே.)

---

இராகம்-பந்துவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

அஞ்சேலென்றருள் வாயே ; உன்
தஞ்சமென்றலட்டேன் தாயே.

அநுபல்லவி.

வஞ்சிசிவகாம வல்லியே நீயொரு
வளைமா தரு பரிபூரண
வடிவாய்வந் தடியேனுளும்.

சரணங்கள்.

சஞ்சலத்தீயெரித் தெளியேன் - சார்வ
காலமுமேமிக அளியேன் - உந்தன்
தஞ்சமென்றடைந்துந் தடையேதுதாயே இது
தருணந்தருணங் கருணை
கரிகாத்தருள் கடையேனையும். ௧.

தீவினையென்றொரு பழியேன் - உன்னை
தாவிக்கண்டுதொழத் தடையேன் - தினம்
ஆவினைக்கன்றுபோ லலறியேயழுமெந்தனுக்
கதிசுந்தரி தயவீதருள்
ஆராதரிப் பாரொந்தனை. ௨.

கேசவன்கண்டவுன் காக்ஷி - கன்ம
மாசாபாசத்தையு மவிக்கும் - உந்தன்
தாசன்தவித்தலைத் தாழ்ந்திடத்தீர்த்திடும்
தஜ்ஜேம் தகஜேம்தத்திமி
தாண்டவர் பாகத்தம்மே - (அஞ்சே) ௩.

இராகம்-கமாஸ் - ரூபகதாளம்.

பல்லவி.*

மயிலைவாசர்சேர்-மறுபடி-மதித்துப்பாராரோ.

அநுபல்லவி.

கயிலைவாழ்கங் காதரரேயன்று
கண்டசற்குருபோற்.கடையன்காண.

சரணங்கள்.

கடைக்கண்பாராரோ - எளியன்றன்
கவலை தீர்க்காரோ
அடுத்தவெந்தனை யாதரித்துப்பர
மானந்தந்தோய்ந்திட ஐயன்சற்குருவாய். ௧

அன்பைவளர்த்தேனே - அவர்மீ
தில்புற்றிருந்தேனே
துன்பந்துடைத்துத் தெளிவிலாவெனக்கும்
தோன்றிக்கலந்தல் செயச்சற்குருவாய். ௨

தேசமொன்று மிலையே - அவரன்றி
வேசித்தன்மையிலையே
கேசவன்போற்றிடக் கண்டம்மயிலையில்
காட்டியவாறு கலக்கச்சற்குருவாய்-(மயிலை.) ௩

## இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்.

### சந்துகள்

தாயேநீயே தயவாய்த்தரிசனம்
தந்தும்பணாயே தனாயேகுறையோ. ௧.

நாயேனுனையே நம்பிப்பணிந்தேன்
வாயேன்வேண்டும் வரமேதருக. ௨.

பேயென்றல்லை, பேதித்துலகம்
பிழையேன்காப்பாய் இனிப்பேராசே. ௩.

சேயேகேசவன் தாயேயுனக்கு
சேதித்தவன்சஞ் சலத்தைக்கழிப்பாய்-(தாயே)

---

## இராகம் - ஆகிரி - அடதாளம்.

### கண்ணிகள்.

ஆண்டகுருவேஉன்னை யடுத்துமலைதலோ
ஐயையோஅடியேனு ளாசையோ. ௧.

காண்டகவனமெரி கனலொத்தபுலிமாய்கை
மூண்டெரித்தெளியேனை மீறுதே. ௨.

உத்தமாவுன்னரு ளில்லாதுலகத்தில்
உய்வனேஞானழிவினை யார்தவே. ௩.

சுத்தனே உந்தனைக் கேசவன் மனக்கவலையால்
கண்டுங்குறையோ கடைத்தேற்றுவாய். ௫

## ஆனந்தக்களிப்பு.

பல்லவி.

சரணஞ் சரணங் குருவே - சிவ
சற்குருவே உனைச் சார்ந்தனன் சிறியேன்.

சரணங்கள்.

சிறுமையைச் சேதித் தெளியேன் - தன்னை
சேரவாவென்றன்னை, செப்பலெந் நாளோ
மறுமைமகேந்திர யோகம் - இன்று
மாறுவதானுலு மதியேன் மகேசா. ௧

எல்லாமா யல்லவுமாகி - என்றும்
எங்குநிறைந்த, என் கண்ணே, எங்கொளித்தாய்,
கல்லாதநாயேனை நீயே - கன்ம
காரணம்போக்கியே கடைத்தேற்றுவாயே. ௨

உலகத்திலுழியன் நானே - என்றும்
உய்வதரிதன்னருளேயல்லாது
பல்கற்றும்பாச மடக்கர் - அந்த
பண்பொன்றைப்போக்கும் பரங்குருவே. ௩

சேசவல் கண்டவுன் காக்ஷி - கல்மம்
ஆசாபாசத்தையு மழித்தே அருளே
நேசமாய் நில்நிடச் செய்யே - நிதம்
நின்மலானந்தமாய் நிஷ்டைடபுரியே-(சரணம்.) ச.

இராகம்-நீலாம்புரி.

ஆராரோவென் கண்ணிகள்.

திருவருளே எங்குந் திகழ்ந்தபரிபூரணமே
அருவேஉனையறிந்தோர் ஆராரோஆராரோ. க.

இன்பப்பெருக்கே இறையேஎன் னின்சுவையே
அன்பாலுனையறிந்தோர் ஆராரோஆராரோ. உ.

சித்தாந்தவீதிவரும் சித்தேசிவமே,என்
அத்தாஉனையறிந்தோர் ஆராரோஆராரோ. ௩.

அருமறையுங்காணு அகண்டபரிபூரணமே
அருவேஉனையறிந்தோர் ஆராரோஆராரோ. ச.

பொய்யானமெய்யையிந்தப் பூவுலகிலேவெறுத்து
ஐயாஉனையறிந்தோர் ஆராரோஆராரோ. ரு.

உளமகிழ்ந்தேஊட்டும் உருவேஅருவேயோ
அளவிலாநின்பெருமை அறிந்தவர்கள் ஆராரோ. சா.

கண்ணாரக்கண்டு களித்துக்கலத்தல்செய
அண்ணாஉனையறிந்தோர் ஆராரோஆராரோ. ௭.

அண்டசராசரங்களில்நீ அமைத்தஉறுப்பின்பெருமை
கண்டுஅதிசயித்துக் களித்தவர்கள் ஆராரோ. ௮.

கேசவனுங்கண்டுதொழுங் கேவலமேஆவலுள்ளோர்
ஆசைவிட்டுத்தாமறிந்தோர் ஆராரோஆராரோ. ௯.

## தேவாரப்பண்.

ஐம்புலப்பொறிகலங்கி அறிவழிந்தைம்மேலுந்தி
அம்பிகைநாதாநீயே அலமந்தபோதென்றாவி
அம்புவிதனிற்பிறக்கா தஞ்சேலென்றருள்செய்வாயுன்
அம்புயபதத்தைச்சேர்ந்து அடியனேன்வாழுதற்கே.



## மங்களம்.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

மயிலைசற்குருவுக்கு மங்களம் - சுபமங்களம்.

சரணங்கள்.

பதஞ்சலிபூசிக்கும் பாதாரவிந்தத்திற்கும் - (மயிலை)
அம்பிகைபாகமுள்ள ஆநந்தத்தாண்டவர்க்கும்-(மயி)

யோகிகள் தேடுகின்ற ஏகநாயகனுக்கும் - (மயிலை)
தேஜோமயமான தேசிகன் பொன்னடிக்கும்-(மயிலை)
அடியேனைவாவென்று அழைத்தபுலவ் சிரிப்பிற்கும்(ம)
அருவருளாட்கொண்ட அறுபத்துமூவர்க்கும்-(மயி)
அன்பெனுமலர்சாத்தும் அன்பரானவர்க்கும் - (மயி)
சேவல்பூசிக்கும் தேசிகல்பொன்னடிக்கும்.

மயிலைசற்குருவுக்கு மங்களம் - சுபமங்களம்.

---

தனிக்கீர்த்தனைகள்

முற்றிற்று.

---

ஆண்டகுருவின் அடியிணைசரணம்.



# சோ்ஜனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
| --- | --- | --- | --- |
| ௯ | ௧௭ | ருய்ப்பொருட்டு | ருய் பொருட்டு |
| ௧௫ | ௧௧ | போர்ச்செய்தறி | போர்செய்தறி |
| ௧௫ | ௧௩ | போர்ச்செய்ய | போர்செய்ய |
| ௧௫ | ௧௭ | புகழ்ப்பெற்ற | புகழ்பெற்ற |
| ௬௬ | ௧ | லன்றிஇன்ளோ | லன்றிஇந்நோ |
| ௮௬ | ௧௨ | தனியந்தனக்கு | தனியன்றனக்கு |